[4th May 1962

Sir, I want to add that since this answer was framed, the report has been received.

**Sri J. MATHA GOWDER :** ஸார், சென்ற ஆண்டு களிமண் சுத்திகரிப்புக்கு என்று சென்ற ஆண்டு அந்தத் தொழிலை ஆரம்பிப்பதற்கு என்று 15 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டிருந்தது. அப்படி ஒதுக்கியிருந்தும் அந்தத் தொழிற்சாலை இன்னும் ஆரம்பிக்கப்படவில்லை. அதற்காகத்தான் நான் இரண்டாவது கேள்வியையும் கேட்டிருக்கிறேன். ஆகவே அந்தத் தொழிற்சாலை எங்கே எப்பொழுது ஆரம்பிக்கப்படும், என்னென்ன நடவடிக்கைகள் எடுக்கப்பட்டிருக்கின்றன என்பதைப்பற்றிய விவரங்கள் சொல்ல முடியுமா என்பதை அறிய விரும்புகிறேன்.

**The Hon. Sri R. VENKATARAMAN :** கிடைத்த அறிக்கை கனம் அங்கத்தினருக்கு சாதகமாக இல்லை என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன். இப்பொழுது வந்திருக்கிற அறிக்கையின்படி போதுமான அளவுக்கு பீங்கான் களிமண் கிடைக்கவில்லை என்று அறிக்கையில் இருக்கிறது. ஆகவே அதில் மேற்கொண்டு ஈடுபடுவது கஷ்டம்.

*23 Q.—**Sri J. MATHA GOWDER :** கனம் கைத்தொழில் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) நீலகிரி ஜில்லாவில் சேராம்பாடி என்ற இடத்தில் களிமண் சுத்திகரிப்பு செய்வதற்காக 1961-62-ம் ஆண்டுக்கு எவ்வளவு தொகை ஒதுக்கப்பட்டது ?

(இ) வேலை ஆரம்பிக்கப்பட்டிருக்கிறதா ?

(உ) இல்லையென்றால், காரணமென்ன ?

**The Hon. Sri R. VENKATARAMAN :** (அ) 'Nil', Sir.

(இ) & (உ) Do not arise.

*Municipal Engineer (Trichy)*

*24 Q.—**Sri M. S. MANI :** கனம் நகராட்சி நிர்வாக அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 3-3-1962-ல் திருச்சி நகராட்சி மன்றம், நகராட்சிப் பொறியாளரின் பணியை நீடிப்பது பற்றி, நிறைவேற்றிய தீர்மானம் அரசாங்கத்திற்குக் கிடைத்ததா ?

(இ) அப்படியானால், அதன்மீது எடுக்கப்பட்ட நடவடிக்கை என்ன ?

**The Hon. Sri S. M. A. MAJID :** (அ) Yes, Sir.

(இ) The request contained in the resolution was negatived by Government on administrative grounds.